

# கவிமுளரி®

மாதாந்த மின்னிதழ்

கவிதைகளின் வாசம்

ISSN 3021-6680

கால்கோள் : 2023

Kavi Mulari Magazine



புதிய ஆக்கங்கள் வரவேற்கப்படுகின்றன.

படைப்புகளை அனுப்புவோர் கவனிக்க வேண்டியவை :

- கவிதைகள் மட்டுமே அனுப்பலாம்.
- ஒருங்குறியில் (Unicode font) தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும்.
- படைப்பாளர் படைப்பின் கீழ் தமிழில் பெயரையும், மின்னஞ்சல் முகவரியையும் இட்டு அனுப்ப வேண்டும்.
- ஆக்கம் தனது சொந்தப் படைப்பு என்பதை உறுதிசெய்தல் அவசியம்.
- புகைப்படம் இணைத்து அனுப்பலாம். (நாகரிகமானதாக இருந்தால் மட்டுமே இணைக்கப்படும்)
- ஒவ்வொரு மாதமும் 15 ஆம் தேதிக்குள் ஆக்கங்கள் அனுப்பிவைக்கப்படல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை ஆக்கங்களும் அனுப்பலாம்.
- ஆக்கங்கள் அடுத்தடுத்த இதழ்களில் பிரசுரிக் கப்படும்.
- மின்னஞ்சலுக்கு அனுப்பப்படும் ஆக்கங்களே இதழுக்கு ஏற்கப்படும்.

..........................................

ஆக்கங்களை அனுப்ப

editor2023kavimulari@gmail.com



"எழுதுகோல் புரட்சி
எங்ஙனும் எழும்பட்டும்
விழுதென விடுதலை
சமூகத்தில் நிலைக்கட்டும்"

**நற்கவிகளுக்கு**
**வணக்கம்,**

வாழைச்சேனை பேத்தாழையைத் தளமாகக் கொண்டு இயங்கும் விபுலானந்தர் கலை இலக்கிய
மன்றத்தின் முயற்சியாகக் 'கவிமுளரி' எனும் கவிதைசார் மின்னிதழ் வெளிவருகிறது.

பிரதேச கவிஞர்களுக்குக் களம் கொடுப்பதும் அவர்களின் எழுத்தாக்க முயற்சிகளுக்குக் கரம் கொடுப்பதும் எமது பிரதான அவா. தொடர்நதும் கவிமுளரிக்கு நீங்கள் ஆதரவளிப்பீர்கள் என நம்புகின்றோம்.

இதழில் பங்குபெறும்
கவிஞர்கள் யாவர்க்கும்
வாழ்த்துகள்.

சிலரது கவிதைகள் இடம்பெறாமல் போயிருக்கலாம். அவர்களது கவிதைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் நிச்சயம் வெளிவரும்.

தொடர்ந்தும் உங்கள்
பேராதரவை வேண்டும்,

உங்கள்,
-இதழாசிரியர்

2023.12.25



## கவிமுளரியில் வாசம் வீசும் கவித்தாதுக்கள்

- மருதமூர் ஜிதர்சினி
- மூ.அருளம்பலம்
- தமிழ்ப்புதல்வன் க.த.யேசுசகாயம்
- வளர்கவி வாழையூர் அபி
- தமிழ்மகள் சதுர்த்தி
- தாழையூர் யது
- தமிழூராள் அனுஷ்திக்கா
- ப. விதுர்சனா
- அலெக்ஸ் பரந்தாமன்,
- கவிஞர் ரவிகிருஷ்ணா
- கு.சூஜிமிதா
- இரா.நிதன்
- வீரா மோகன்
- பிள்ளைக்கவி பிரசாந்
- இசைப்பிரியன் கபிலன்






# புரிந்துணர்வால் உலகை வெல்வோம்

-மருதமூர் ஜிதர்சினி

புரிந்து கொள்ளடா புல்லையும் –மானிடா!
மனதை மகிழவைக்கும் அதுதான் மெதுவாய்...

அல்லும் பகலும் சிந்திப்பாய் –மானிடா!
பிளவு என்னும் பிணிதான் எதற்கு...?

புரிவோம் இன்று இனத்தை –மானிடா!
பணிவாய் நடப்போம் பாரிலே...

மனைக்கு ஏற்றும் ஒளியில் சற்று –மானிடா!
உன் மனதிலும் ஏற்ற ஏங்கடா...

பல்லினம் பேசும் பன்மைவாதிகள் யாரோ?
என்னினம் என்று மார்பைத் தட்டும் மாக்கள் தானோ...

பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தும் –மானிடா!
இனம் என்ற வார்த்தையில் பிரிப்பதும் ஏனடா...?

பரமனே ஒன்றெனப் படைத்தாய் – மானிடா!
பாதியில் பிரித்தவனும் பணக்காரனோ...?

இன்றே எழுவோம் ஒன்றென –மானிடா!
நன்றே வாழ்வோம் நலமுடனே.

***




# புனிதம் புதைகின்றதே..!

இனத்துக்குள் பல
வர்க்கங்களுண்டாக்கி
மானிட மனங்களைக்
கருங்கற்களாக்கி,

நற்குணங்களைச்
செல்லாத காசாக்கி
நடிப்பிற்கே உலகை
அடிமையாக்கி,

கருணை அன்புபாசத்தைக்
காட்டிலோட்டி
சூதுவாது மோசடியைச்
சூழவிதைத்து,

சாம்பலான சாம்பிராட்சியங்கள்
சரித்திரம் படைக்க
சரித்திரம்படை மானிடரைச்
சாம்பலாக்கி,

இன்றிளைஞர்கள்
வெம்பிப்பழுத்து
போதையிலுழன்று
வேதனையை யுழைப்பதும்,

சந்துபொந்தில்
நுழைந்து
சாக்கடையைத் தோண்டி
வம்பளந்து மாய்வதும்,

* * *




விசித்திரமான வுலகில்
விபரீதமான செயல்கள்
அவலங்களுக்குள்ளாவதும்,

மனிதரிடம் மனிதம்
மறைந்து போவதும்
புனிதமும் ஒழுக்கமும்
புதைந்து போவதும்
மானமோ மண்ணுள்
மடிந்து போவதும்,

வெந்துதணிந்த
காட்டினைப் போல்
மனமே பாவங்களின்
மூலதனமாவதும்
மானிடர் பதைபதைத்துப்
போவதும்,

மனித நேயம்
மார்க்கங்களின்
உயர்குணம்
மறைந்ததாலோ
மனிதரெல்லாம்
நடைபிணம் ஆவதும்,

மனிதம் மறைந்ததாலே
மானிடர்
புனிதம் புதைகின்றதே...!

-மூ.அருளம்பலம்
(ஆரையூர் அருள்)

* * *



## மாண்புக்கு பெயர் மாதர் குலம்

ஆண்டாண்டு காலங்கள் பெண்ணை
அவனியிலே அவமதித்து வந்தோம்
மாண்டாலும் ஆணென்றால் மண்ணில்
மங்காத புகழுடனே வாழ்வர்
ஆண்டவனும் பெண்ணிற்கு உடலில்
அழகாகச் சரிபாதி தந்தான்
மாண்பென்றால் பெண்ணென்று நாமும்
மார்தட்டி இனியேனும் சொல்வோம்.

கூட்டில் வாழும் புள்ளினத்தில்
கூட்டுப் புணர்ச்சி கிடையாது
காட்டில் வாழும் விலங்கினத்தில்
காணத் தகுமோ வன்புணர்வு?
கூட்டுப் புழுவாய்ப் பெண்டிரையே
குறைத்து என்றும் எண்ணாதீர்
கேட்டுக் கொள்வீர் மானிடரே
கேலி இனியும் செய்யாதீர்.

அடுப்பை ஊதும் பெண்களுக்கு
அறவே வேண்டாம் கல்வியென
எடுத்துக் கூறிய பெரியோர்கள்
எங்கோ மறைந்து போனாரே
கடுப்பை என்றும் காட்டாது
கருணை கொள்வோம் அவரிடத்தில்
துடுப்பைத் தேடும் படகாகத்
துணையாய் வேண்டும் பெண்குலமே



* * *



குடும்பம் தன்னைக் காத்திடுவாள்
குலத்தைக் காக்கும் தெய்வம்போல்
இடும்பைக் கண்டு அஞ்சாமல்
எதிர்த்து நீச்சல் போட்டிடுவாள்
உடும்பைப் போன்றே உள்ளத்தில்
உறுதி கொண்டு வாழ்ந்திடுவாள்
கொடுமை பலவும் தாங்கிடுவாள்
கொஞ்சும் மழலை வளர்ந்திடவே !.

எண்ணம் தன்னில் அனுதினமும்
எளிமை கொண்டு வாழ்ந்துவரும்
பெண்ணின் மகிமை பாடாது
பெருமை வந்து சேராது
மண்ணில் வாழும் மானிடரே
மங்கை குலத்தைக் காத்திடுவீர்
கண்ணைக் காக்கும் இமைபோல
கருத்தாய்ப் பெண்ணைக் காப்போமே

வீட்டில் வேலை செய்தவர்கள்
விண்ணில் பறந்து செல்கின்றார்
ஏட்டுக் கல்வி கற்றதனால்
ஏற்றம் பலவும் பெறுகின்றார்
நாட்டில் நிலவும் வன்முறைகள்
நாளும் குறைய வழிவகுப்போம்
பாட்டில் மட்டும் பாடாமல்
பாங்காய் வாழ்வில் போற்றிடுவோம்.

-தமிழ்ப்புதல்வன்
க.த.யேசுசகாயம்

* * *





# கைபேசியில் ஓர் அழைப்பு

– வளர்கவி
வாழையூர் அபி

தடுமாறித் தவறிய
அழைப்பில் என்னை – நீ
தத்தெடுத்துக் கொண்டாயோ...?

தடுமாற்றம் தட்டிச்சென்று
தரிசாய் உள்ளம் தனித்துக் கிடக்கிறது,
நேரில் உன்னைக் காணவோ...?

மார்கழி மழை தினம் தினம்
உன் நினைவுகளை – அகத்தில்
மீட்டிச் செல்லக் காரணம் அறிவாயோ...?



கைபேசியில் இனியும் ஓர் அழைப்பு
வேண்டாம்.
கதை பேசி – கழிந்த காலம்
விரயமென உணர்வாயோ...?

சிணுங்கிச் சினம்கொண்ட வார்த்தைகள்
காதோரமாய்க் கதை பேசுகின்றன.
இனியும் காக்க வைக்க உத்தேசமோ...?

இராப் பொழுதில் நீ பாடும்
கானங்களைக் காலிப் பெட்டிகள் – காகிதமாய்க்
கிறுக்கியதைக் காண்பாயோ...?

கைபேசியின் கீறல்களில்
காற்றில் கரைவதெல்லாம் – அழைப்பல்ல,
என் தவிப்பெனத் தட்டிச் செல்வாயோ...?

கைபேசிக் காதலனே
நேரில் பேச வந்துவிடு – பொய்ப்பேச்சு
இனி வேண்டாம் தலை சாய
மார்பு தந்திடுவாயோ...?

* * *



# தாயும் தாய்மொழியும்

எந்த மண்ணில் பிறந்தாலும்
எந்த மொழியில் வாழ்ந்தாலும்
சொந்தம் என்று உணர்விலும்
முந்தும் ஒன்றே தமிழ் உறவு...

முதலில் மொழிந்த சொல்
முழு உலகில் முதல் சொல்
கருவின் மூல உணர்விலும்
கலந்து பிறந்தது தமிழ் உறவு...

சிறுபராயச் செயலில் வழிநின்று
திருத்தினாள் என் தாய் – இன்று
சீர்களின் வழிநின்று
எனைத் திருத்துகிறாள் தமிழ்த்தாய்...

நான் தலைகுனிவதை விரும்பாத
என் தாயைப் போலவே
உலக அரங்கில் தலைநிமிரச் செய்கிறாள்
என் தமிழ்த்தாய்...

எழுவதும் வீழ்வதும்
வாடிக்கை ஆகிப்போன இவ்வுலகில்
உரமூடி வளர்த்து
வேடிக்கை பார்க்கிறாள்
என் தமிழ்த்தாய்...

-தமிழ்மகள் சதுர்த்தி

* * *






அகிலத்தின் ஆதாரம் நீயே!
ஆரவாரமாய்ப் பொழிவதும் நீயே!
இடி மின்னல் மீட்டி இசைப்பதும் நீயே!
ஈங்கு மக்கள் வாழ்வாங்குவாழ மூலமும் நீயே!
உழவர் நெஞ்சைக் குளிர்விப்பதும் நீயே!
ஊக்கமாய் உயிரை வளர்த்தெடுப்பதும் நீயே!
எட்டுப்பட்டி எங்கும் தொழில் புரிவதும் நீயே!
ஏரி எங்கும் வற்றாது காப்பதும் நீயே!
ஐப்பூதங்களில் ஒருவனாய் நிற்பதும் நீயே!
ஒற்றை வானில் ஓயாமல் ஒலிப்பதும் நீயே!
ஓரிருவர் அன்றி உலகத்தையே மகிழ்விப்பது நீயே!
ஔடதமாய் வையத்தின் பிணி தீர்ப்பதும் நீயே!
இஃதே வாழ்க்கை மேலாங்க வருகை தந்திடுவாய் நீயே!

-தாழையூர் யது
பேத்தாழை,வாழைச்சேனை.

* * *

# புகை

விரலிடையே அமர்ந்து
உயிரினைக் கொல்லும்
அரக்கன்

புகை வழியே நுழைந்து
நுரையீரல் கருக்கும்
கொடியன்

ஆயுள் குறைத்து
மரணம் தருவிக்கும்
காலன்

அடிமையாக்கி நம்மை
ஆயுள் கைதியாக்கும்
வெறியன்

அவனை ஒழிக்கும்
வழியின்றி நடக்கு
உய்வென்பது
எதுவுமில்லை.



-தமிழூராள் அனுஷ்திக்கா

* * *





# அம்மா

கருவறையில் இருந்த நான்
அகிலம் பார்க்கவே
ஆதங்கம் கொண்டு எழுந்திட
நரகவலி எனத் தெரிந்தும் நீ
சொர்க்க வரமாய் எனை ஈன்றெடுத்தாய்.
அகிலம் பார்க்க வந்த நான்
பார்த்தது உன் வதனத்தை மட்டுமல்ல
உன் மழையெனப் பெய்த அன்பின் வெள்ளத்தையுந்தான்.
அகங்காரமாய் நான்
ஆரவாரம் செய்கையிலும்
அன்புடனே எனை அணைத்துக்கொண்டாய்
அகிலமே இகழுமாயினும்
அன்புடனே என்றும் நீ எனை ஆனந்தமாய்ப் புகழ்ந்திடுவாய்
வெண்பிறை தேய்ந்து வளர்வதாயினும்
உன் உள்ளநிலவுக் காருண்யம் மாறாததே

-ப. விதுர்சனா
கிண்ணையூர்.

* * *



# கைபிடித்து நடத்துமொரு காலம்!

நீ - ஓர்
இளங்குருத்து!

எதிலாவது
சாதிக்க வேண்டுமென
விரும்புகிறாய்.

ஆயினும்,
இச்சமூகம்
உன்னை விடுவதாக இல்லை.

கவிதை எழுத
கத்திரிக்கிறார்கள்...

கட்டுரை எழுத
வெட்டுகிறார்கள்...

கதை எழுத
நகைக்கிறார்கள்...

தளராதே!
தன்நம்பிக்கை கொண்டு நட....

அதோ! வருகிறது
உனக்கான காலம்
உன்னைக் கைப்பிடித்து நடத்துவதற்கு.

- அலெக்ஸ்பரந்தாமன்,
புதுக்குடியிருப்பு.

***




# போலிகள்

அன்பராய் அருகில் வந்து
அழகாய்ப் பேச்சும் தந்து
அருவியாய்க் கதைபொழிந்து
அரசராய் ஆணைசெய்வார்

ஆசையாய் அரவணைத்து
ஆருயிர்த் துணையதாகி
ஆர்வமாய் விரைவெடுத்து
ஆனதைச் செய்துவைப்பார்



இதயமோ கனிந்து நின்று
இழிவெலாம் விலைகொடுத்து
இணங்கியே இசைந்திருந்து
இலக்கியம் எடுத்துரைப்பார்

ஈர்ந்திடப் பலதும் சொல்வார்
ஈசனாய் வடிவெடுப்பார்
ஈற்றிலே வேகமுற்று
ஈதலாய்ப் பணிமுடிப்பார்

உடனவர் வந்திருந்து
உற்றாராய்ப் புகழ்ந்துரைப்பார்
உற்றொன்று வந்துவிட்டால்
உடனோடிக் கழிந்திடுவார்

***

ஊகமாய்க் தொடக்கமுற்று
ஊரிலே பெயரெடுத்து
ஊஞ்சலில் ஆட்டமாகி
ஊரவர் பெயருரைப்பார்

எளிதிலே ஏக்கமுற்று
எல்லையும் கடந்து நின்று
என்னவோ என்பதாகி
எல்லாமும் இவைகளென்பார்

ஏக்கமாய் கூடிநின்று
ஏராளம் கதைபுனைந்து
ஏற்றதாய் வழிகொடுத்து
ஏளனம் செய்துவைப்பார்

ஐயமே வந்திடாமல்
ஐயமாய் வேலையுற்று
ஐகரம் உடமையென்று
ஐம்புலம் தேற்றிவைப்பார்

ஒன்றதே நாமுமென்று
ஒருவராய்ப் புத்திசொல்லி
ஒவ்வொரு நொடியதாக
ஒப்பற்ற உவமை செய்வார்



-கவிஞர் ரவிகிருஷ்ணா
கிரான் குளம் - 07, மட்டக்களப்பு.

ஓதியே பலதும்கூறி
ஓரணி இணையதாகி
ஓரெழில் தோற்றமாகி
ஓலமே பாடிநிற்பார்

நயமுடன் நம்பவைப்பார்
நாவாறப் புகழ்ந்துரைப்பார்
நல்லதே நடக்குமென்று
நற்றமிழ்ப் பாட்டிசைப்பார்

முகத்திலே முகமன்காட்டி
முத்தழகாய்ச் சிரிப்புங்காட்டி
முதலதாய் முனைந்திருந்து
முழுவதும் செய்துவைப்பார்.

* * *





# அகிலம் போற்றும் பெண்

அகிலம் போற்றும் பெண்
அன்றாடம் வடிக்கும்
கண்ணீரைப் பாரீரோ!
கதைகள் கேளீரோ !

பூமிதனில் முளைத்த
கற்பக விருட்ஷம்
அடிக்கின்ற அனலில்
இலைகளை உதிர்கின்றது

வஞ்சகர்கள் சமூகத் தோப்பினுள்
வைரஸாய்த் தோன்றி நிற்க
பேதைப் பெண்ணவளின்
சீரும் சேதமாகின்றது

இடர்பட்டு இடிபட்டு
ஆயிரங்குற்றங்கள் சிரசைக் கொய்ய
சிரமப் படாமல்
பலவித பட்டங்கள்

கற்பெனும் மாங்கனி
மங்கையவள் வயிற்றில்
பொக்கிஷமாய்ப் புதையுண்டிருக்க
களவாடும் காளையர்களுக்கு
வயது வேறுபாடில்லை

அரும்பாய்த் துளிர்விட்டாள்
ஆட்டுக்கிடா அதை மேய
ஆடம்பரச் சக்கரத்தில்
அவமானக் குறியீடுகள் பற்பல

* * *



முற்றியே விளைந்து
பருவமாய் நின்றபோது
உடற்குறைகளும் ஏழ்மையும் சூறையாட
எரிமலையாய்க் குமுறிடும்
வேதனைகள் பல.

காணி விற்று களனி விற்று
கஷ்டப்பட்டுப் பெண்ணவளை
கற்பூரப் பெட்டகமாய்க்
குடித்தனம் நடத்தவிட்டால்
அடிக்கின்ற அடை மழையில்
பெட்டியுடன் நடைபோட்டாள் அம்பலத்திற்கு

கூடிக்குலாவி கலந்து வாழ்ந்து
வருடங்கள் கழிந்தும்
வாரிசில்லை என்பதற்காய்
'மலடி' என்றொரு பெயரும்
கூடவே சூடிக்கொண்டாள்

சீர்கொடுத்துச் சிறப்புச்செய்த
கச்சேரிகள் மறைந்தன
மாங்கல்யத்தை முத்தமிட்ட மணவாளனோ
சுடுகாடு செல்ல
'விதவை' என்ற இன்னுமொரு பட்டம் சேர்ந்துவிட

அகிலம் போற்றும் பெண்
அனற்பட்ட புழுவானாள்.

-கு.சூஜிமிதா
நாசிவன்தீவு.

* * *




## அவளும் நானும்...

காதல்
கதை பேசும்
கானகத்தின்
வழியெங்கும்
அவளும் நானும்
கானலும் மீனும்...

ஊடல்
கொண்ட
பொழுதெல்லாம்
உறவாடும்
தென்றலோடு
அவளும் நானும்
குளிரும் மோகமும்...

நாவலின்
திறந்த
பக்கங்களில்
நகைச்சுவைக்கு
அப்பால்
அவளும் நானும்
வரிகளும் வர்ணனையும்...

பேச மறந்த
மௌனத்தின்
வடுக்களில்
சொல்லத்
துடிக்கும்
அவளும் நானும்
சினமும் சங்கீதமும்...

ஓசையெழுப்பும்
ஆசை
இசைகளில்
ஒன்றாகப்
பிணைந்த
அவளும் நானும்
ஒத்திசையும் ஒவ்வாமையும்...

எத்தனை
தான்
சொல்லி
வடித்தாலும்
என்றும்
எப்போதும்
அவளும் நானும்
காதலும் காயமும்...

- இரா. நிதன் -

* * *




# கலைந்த கனவு

(அறுசீர் விருத்தம்)

□□□□□□□□□

மடியோடு மடிசாய நானும்
            மனமேங்கி மகிழ்வோடு நாட,
வடிவான வனமங்கை நீயும்
            வாகாக வளைந்தோடக் கண்டு,
விடியாத இரவெல்லாம் நீள,
            விழிமூட முடியாமல் நொந்து,
கடிவாள மில்லாம லோடுங்
            கடிகாரம் போற்சுற்றி னேனே!.



கள்நாடுந் தேன்வண்டு போலக்
            கருத்தோடு நானுன்னை நோக்க,
உள்ளூறக் களித்திட்ட காக்கை
            உதறித்தன் னுறவோடு கொஞ்ச,
துள்ளுங்கன் றாய்நீயும் வந்து
            துயரத்தை நீக்காயோ? வென்று,
உள்ளூருந் துடிப்போடு நானும்
            உழல்கின்ற தளிராகி னேனே!.

கண்பாரா விதமோடி வந்து
            கண்மாயங் காட்டித்தா ழாமல்,
பண்பாடு மிசையோடு பேசப்
            பார்க்காது நான்வந்து தீண்டத்,
தண்டம்நீ யென்றேகித் திட்டத்
            தடைதாண்டி நானுன்னு ளேகும்,
அண்டாத சூகனவொன்று மேவ
            அடிக்கின்ற புயலாகி னேனே!.

-வீரா மோகன்.

* * *



# அன்பரின் பிறப்பு...! அவனிக்கே மீட்பு...!

அன்பின் வழியிலே
அமிர்தமொன்று வந்தது

ஆசையில் அகிலமே
ஆடிப்பாடி மகிழுது

இன்பம் தந்திட
இதயமெங்கும் நுழைந்தது

ஈகை மாண்பினை
ஈடில்லாமல் பொழிந்தது

உள்ளம் மீட்டிட
உண்மையொளி வந்தது

ஊரார் மகிழ்ந்திட
ஊனநோய்கள் களைந்தது



***






எண்ணம் உயர்ந்திட
எண்டிசையும் அறிந்தது

ஏழ்மைத் துன்பமும்
ஏகன் வருகை தீர்த்தது

ஐயங்கள் யாவையும்
ஐயன் இயேசு தீர்க்கிறார்

ஒற்றுமை சிறந்திட – மீட்பை
ஒப்பில்லாது விதைக்கிறார்

ஓடமாய் நமைக் கரைசேர்க்க
ஓருருவாய்த் திகழ்கிறார்

ஔவியம் அகற்றிட – புவியின்
ஔடதமாய் உதித்தாரே.

-பிள்ளைக்கவி பிரசாந்
கிண்ணையூர்.

* * *





-இசைப்பிரியன் கபிலன்
கல்லடி.

# -அவள்-

அழகான கவிதை – அவள் பெயர்
ஆழமான கவிதை – அவள் மனம்
ஒருவரிக் கவிதை – அவள் நெற்றி
இருவரிக் கவிதை – அவள் இதழ்கள்
இலக்கியக் கவிதை – அவள் வெட்கம்
இலக்கணக் கவிதை – அவள் பேச்சு
விடை அறியாக் கவிதை – அவள் மௌனம்
விளக்கமில்லாக் கவிதை – அவள் விழிகள்
எழுதப்படாத கவிதை – நம் காதல்
ஏற்க முடியாத கவிதை – அவள் பிரிவு
தொலைக்க முடியாத கவிதை – அவள் உணர்வு
உரை முடியாத கவிதை – அவள் மழலை.

***

கவிதை
மொழியின்
காப்பகம்.

—காரிருளன்.







ISSN 3021-6680 Kavi Mulari Magazine